# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 3 • Issue: 1 • March 2016 • Annual Subcription Rs. 100/- • மலர் 3 • இதழ்: 1 • மார்ச் 2016 • வருடச் சந்தா ரூ. 100/-



# எல்லாம் அவன் செயல்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





" நம் அகத்தில் தாமாக ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தையும் இயற்கையானது என, எதிர்ப்பின்றி ஏற்றுக்கொண்டு நமது புறச் செயலை மட்டும் நம் மன உணர்ச்சிகளின் அடிப்படையில் திறம்படச் செய்வதே நம் கடமையாகும்.

– ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



அட்டைப் படம் : புகைப்படக் கலைஞர் திருச்சி **சுதாகர்**



This Book Designed By:
**ORANGE DESIGNER SALEM**
Mobile : 9894377433


கோடையில் இயற்கைச் சூழல் மிகுந்த

## ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : 12–05–2016 வியாழன் மாலை **3:00** மணி முதல்
15–05–2016 ஞாயிறு மாலை **3:00** மணி வரை

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.

- ✦ இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ✦ ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது.
- ✦ உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு **ரூ. 3000/– மட்டுமே.**
- ✦ 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் விரைவில் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

1) M.O, D.D. (or) Cheque : வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

2) Direct payment : நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

3) Online Payment : Credit Card or Debit Card மூலம் www.pravaagam.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன்

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 3.

கைப்பேசி : 9994205880, 9789165555.

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–**
**ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.pravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# எல்லாம் அவன் செயல்



எல்லாம் அவன் செயல்; அவனன்றி ஓர் அணுவும் அசையாது. அவன் ஆட்டுவிக்கிறான், நாம் ஆடுகிறோம்; நமக்கு இச்சா சுதந்திரம் கிடையாது; நமக்கு Free Will கிடையாது; அனைத்தும் தாமாக நடைபெறுகின்றன; நாமாக எதனையும் செய்ய முடியாது.

–இப்படிப் பலரும் ஒருமித்த குரலில் கூறி வருகின்றனர்.

சொல்பவர்கள் யார்?

அவர்கள் சாமானியர்கள் அல்ல. மகா ஞானிகள் பலர் இவ்வாறு கூறுகிறார்கள். அதை ஆய்வு செய்த பலரும் இவ்வாறு கூறுகிறார்கள். அதை அனுபவம் செய்து பார்த்த பலரும் இவ்வாறு கூறுகிறார்கள்.

ஆகவே இந்தக் கூற்றை ஏனோ தானோவென்று எடுத்துக் கொள்ளக் கூடாது.

அதை ஏன் இவ்வாறு கூறுகிறார்கள் என்பதன் உண்மைத் தன்மையை ஆய்ந்து பார்ப்பதே சிறப்பாகும்.

நாம் வெளி நாட்டுக்குச் செல்ல திட்டமிடுவதாக வைத்துக் கொள்வோம். புறப்படும் தேதி, பயணம் செல்ல வேண்டிய விமானம், தங்க வேண்டிய இடம், பார்க்க வேண்டிய நபர்கள், பார்க்க வேண்டிய இடங்கள், செய்ய வேண்டிய வேலைகள் இவற்றை நாம் திட்டமிடுகிறோம்.

ஆனால் இவையாவும் நமது கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவையா?

அவைகள் எவையும் நமது கட்டுப்பாட்டுக்குள் அடங்காதவையே. அவையாவும் அவைபோக்கில் இயங்குகின்றன. அவற்றில் நாம் நாம் நமது திட்டங்களையும் இணைத்துக் கொள்கிறோம்.

நமது திட்டங்கள் மட்டும் நமது கைகளில் உள்ளன. ஆனால் நாம் சார்ந்திருக்கும் புற நிகழ்வுகளும், சூழ்நிலைகளும் நமது கைகளுக்குள் அடங்காதவை. ஆகவே அவற்றுக்கு நாம் பொறுப்பில்லை என்று கூறி விடலாம். ஆனால் நாமாகத் திட்டமிடும் நமது செயல்களுக்கெல்லாம் நாம் மட்டுமே பொறுப்பு.

எல்லாம் அவன் செயல் என்று கூற முற்படுபவர்கள் இன்னும் ஒரு படி மேலே சென்றுவிடுகின்றனர்.

நாமாகத் திட்டமிடுவது கூட நமது செயலல்ல; அதுவும் நம்மையறியாமல் தாமாகவே நடந்து விடுகின்றது. அவற்றுக்கும் இறைவனே காரணம்; இயற்கையே காரணம். இவ்வாறு அவர்கள் கூறிவிடுகின்றனர். நாம் எதையாவது செய்யத் திட்டமிடுவோமாயின் அது நமது சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு தான் அமைய முடியும்.

எல்லாச் சிந்தனைகளும் தாமாகவே தான் ஏற்பட முடியுமே தவிர, நாமாக எந்தச் சிந்தனையையும் கொண்டு வர முடியாது. நாம் முயற்சி செய்யலாம்; ஆனால் வரக் கூடிய சிந்தனைகள் அனைத்தும் தாமாகத் தான் வந்தாக வேண்டும்.

ஆகவே நாம் திட்டமிடுவதாக எண்ணிக் கொண்டாலும்

உண்மையில் அது நாமாகத் திட்டமிட்ட ஒன்று அல்ல.

அதுவும் கூட தாமாக நடந்த ஒன்றே ஆகும்.

இயற்கையானது உலகத்தை எப்படி இயக்குகின்றதோ அப்படித் தான் அது நம்மையும் இயக்குகிறது. நாமே செயல்படுவதாக நாம்தான் இவ்வாறு தவறுதலாக எண்ணிக் கொள்கிறோம்.

ஆகவே நமது செயல் என்று எதுவும் கிடையாது. அனைத்தும் அவன் செயலே.

–அனைத்தும் இறைவன் செயலே.

–அனைத்தும் தாமாக நிகழும் தற்செயலே.

நண்பரைப் பார்க்கிறோம். மகிழ்ச்சியான சிந்தனையும், உணர்வும் தாமாக ஏற்படுகிறது. அவற்றை நாமாகக் கொண்டு வரவில்லை. அவை யாவும் அவையாகவே ஏற்பட்டுத் தோன்றுகின்றன.

அமெரிக்காவுக்குப் பயணம் செய்ய வேண்டிய சூழ்நிலை ஏற்படும் போது அது சம்பந்தமான சிந்தனைகளும் தாமாகவே ஏற்படுகின்றன,

சிந்தனைக்கும், சிந்தித்தலுக்கும் வேறுபாடு உண்டு.

**-Thought** என்பதற்கும், **Thinking** என்பதற்கும் வேறுபாடு உண்டு.

**Thought** என்பது தாமாக ஏற்படுவது.

**Thinking** என்பது நாமாகச் சிந்திப்பது.

நாமாகச் சிந்திப்பதையும், நாமாகச் சிந்தித்து முடிவெடுப்பதையும் **Thinking** என்று கூறுகிறோம்.

**Thought** என்பது நாம் அறியாத ஏதோ ஒரு பகுதியிலிருந்து நம்மையறியாமல் ஏற்படுகிறது. அது ஏற்பட்டு

வெளிப்பட்ட பிறகு தான் நமக்குத் தெரிகிறது.

நமது **Thinking** எவ்வாறு செயல்படுகிறது?

**Thinking** செயல்படும் போது சிந்தனைகளை நாமாக உருவாக்குகிறோமா? நாம் உணவருந்திக் கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். நமது நண்பருக்குப் பிடித்தமான உணவு நமக்குப் பரிமாறப்படுகிறது. உடனடியாக நம்மையறியாமல் நமக்கு நமது நண்பரைப் பற்றிய நினைவு ஏற்படுகிறது. நாம் இப்படி நினைக்க வேண்டும் என்று முடிவெடுத்து நினைக்கவில்லை.

அதுவாக இந்த நினைவு ஏற்படுகிறது. இதனை **Thought** என்று கூறுகிறோம்.

இந்த உணவு வேறு யாருக்கெல்லாம் பிடிக்கும் என நாம் எண்ணுகிறோம். அப்படி நாமாக எண்ணும் போது, அந்த உணவை விரும்பிச் சாப்பிடும் வேறு நண்பர்களைப் பற்றிய எண்ணங்கள் ஏற்படுகின்றன.

இப்படிச் சிந்திப்பதை **Thinking** என்று கூறுகிறோம்.

உணவைப் பார்த்த மாத்திரத்தில் நண்பனைப் பற்றிய எண்ணம் ஏற்படுகிறது.

நண்பனைப் பற்றிய எண்ணம் ஏற்படுவதற்கு உணவை நாம் பார்ப்பது ஒரு தூண்டுதலாக அமைகிறது. அந்தத் தூண்டுதல் தான் நண்பரைப் பற்றிய எண்ணத்தைக் கொண்டு வருகிறது. –**Thought** ஐக் கொண்டுவருகிறது.

"இந்த உணவு வேறு யாருக்கெல்லாம் பிடிக்கும்?" என்ற எண்ணம் இன்னுமொரு தூண்டுதலாக அமைந்து மற்ற நண்பர்களின் நினைவுகளைக் கொண்டு வருகிறது. – **Thought** ஐக் கொண்டு வருகிறது.

அந்த தூண்டுதலின் விளைவாக ஏதோ ஒரு **thought**–நினைவு, தாமாக வருகிறது.

"இந்த உணவு வேறு யாருக்கெல்லாம் பிடிக்கும்?" என்ற எண்ணம் எப்படி வந்தது?

அந்த எண்ணம் தாமாக வந்ததா அல்லது நாமாக அதனைக் கொண்டு வந்தோமா?

உணவைப் பார்த்த மாத்திரத்தில் அதுவே ஒரு தூண்டுதலாக அமைந்து,

இந்த உணவு நமது நண்பன் **X**-க்குப் பிடிக்கும் என்ற எண்ணம் தாமாக ஏற்படுகிறது.

இது **X**-க்குப் பிடிக்கும் என்ற எண்ணம் ஏற்பட்ட உடன் அதுவே ஒரு தூண்டுதலாக அமைந்து,

இந்த உணவு வேறு யாருக்கெல்லாம் பிடிக்கும் என்ற கேள்வியை – எண்ணத்தை ஏற்படுத்துகிறது.

அந்த எண்ணமும் அதுவாகவே ஏற்படுகிறது.

இப்படி ஒவ்வொரு எண்ணமும் ஒரு சங்கிலித் தொடராகவே அமைந்துள்ளது.

ஒரு எண்ணம், மற்றுமொரு எண்ணத்துக்குக் காரணமாக அமைந்தாலும் எந்த ஒரு எண்ணத்தையும் நாமாகக் கொண்டு வர முடியாது.

அனைத்து எண்ணங்களும் அவையாகவே ஏற்படுகின்றன.

அந்த எண்ணத்தைப் பின்பற்றி செயல்களும் ஏற்படுகின்றன. ஆகவே அனைத்து எண்ணங்களும் செயல்களும் தாமாக ஏற்படுகின்றனவே அல்லாது நாமாக எதனையும் செய்வதில்லை –செய்யவும் முடியாது.

ஆனால் நாம் அப்படிப் புரிந்து கொள்வதில்லை. சில செயல்கள் தாமாக நடப்பதாகவும், சில செயல்களை நாமாகச் செய்வதாகவும் புரிந்து கொள்கிறோம்.

நாம் எத்தனையோ பிரச்சினைகளில் சிக்கித் தவிக்கிறோம். அதை எப்படிச் சீரமைப்பது என பரிதவிக்கிறோம். அவன் செய்தது சரியில்லை; இது எனக்கு வந்திருக்கக் கூடாது என நாம் எப்போதும் குறைபாடிக் கொண்டே இருக்கிறோம்.

அனைத்தும் தாமாக நடக்கும் போது யார் யாரைக் குறை சொல்வது? யார் எதனைச் சீரமைப்பது? எவருக்கும் எந்த வேலையும் கிடையாது. அனைத்தும் தாமாகவே நடக்கின்றன.

அனைத்தையும் நாமே செய்து முடிக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்குந்தோறும் அது ஒரு மனச் சுமையாக இருந்து நம்மை அழுத்துகின்றது.

நமக்கு எந்தப் பொறுப்பும், கடமையும் கிடையாது என்ற நிலையில் நம்முடைய எல்லாச் சுமைகளும், சூரியனைக் கண்ட பனி போல்; வெளிச்சத்தைக் கண்ட இருள் போல் ஓடி மறைந்து விடுகின்றன.

இதனால் காலங்காலமாக ஞானிகள் பலரும் இந்த உண்மையை போதித்து வருகின்றனர். அதனை ஏற்றுக் கொண்ட பலரும் மனத்துயரம் நீங்கி நிம்மதியடைகின்றனர்.

இனி நாம் இந்த அணுகுமுறையின் இன்னுமொரு பகுதிக்கு வருவோம்.

அனைத்தும் தாமாக நடக்கின்றனவா? அல்லது அனைத்தையும் இறைவன் செயல்படுத்துகின்றானா?

–இந்தக் கேள்வி தான் இதன் இரண்டாவது பகுதி. இந்த இரண்டு கேள்விகளுக்கும் என்ன வித்தியாசம்?

அனைத்தும் தாமாக நடக்கிறது என்பது ஓர் இயந்திரகதியான– இயற்கையான இயக்கத்தைக் குறிக்கிறது. கடலில் அலை அடிப்பது என்பது இயற்கை. அதற்கு எந்த காரணமும் தேவையில்லை.

அது அப்படித் தான் செயல்படும். அது ஓர் இயந்திர கதியாகச் செயல்படுகிறது.

தாமாக நடப்பது என்பது இப்படிப்பட்ட ஒன்று தான்.

ஆனால் இறைவன் செயல் என்பது வேறு.

இறைவன் செயலில் ஓர் அறிவுடைமை செயல்படுகிறது.ஒரு வழிகாட்டல், ஒரு நெறிமுறை செயல்படுகிறது.

அறிவுப் பூர்வமான – அர்த்தமுள்ள ஒரு செயலையே இறைவன் செயல் என்று கூறுகிறோம்.

இறைவன் நம் அனைவரையும் வழி நடத்துகிறான் என்றால் அது ஓர் அறிவுடைமையின் வழி நடத்துதல் என்று பொருள்.

நள்ளிரவு நேரம் ஓர் இரயில் வண்டி சீராக ஓடிக்கொண்டிருந்தது. திடீரென்று பயணிகள் அனைவருக்கும் ஒரு செய்தி பரவியதால் அனைவரும் கலவரத்துடன் இங்குமங்கும் ஓடத் துவங்கினர்.

கலவரத்துக்குக் காரணமான செய்தி இதுதான்: இரயில் இரண்டு ஸ்டேசன்களுக்கு முன்னால் ஒரு ஸ்டேசனில் வழக்கம் போல் நின்று கொண்டிருந்தது.

இரயில் என்ஜினில் உள்ள ஓட்டுனர்களும் பணியாளர்களும் கீழே இறங்கி டீ சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்.

திடீரென அவர்கள் எதிர்பாராத விதமாக அந்த இரயில் தானாக நகர்ந்து ஓட ஆரம்பித்து விட்டது. ஊழியர்களால் வண்டியில் ஏற முடியவில்லை.

ஓட்டுனர் இல்லாமல் வண்டி ஓடிக் கொண்டிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டதும் பயணிகள் அனைவரும்

கலவரமடைந்து விட்டார்கள்.

எல்லாம் தானாக நடப்பது என்பது இயந்திரகதியாகத் தாமாக நடப்பதாகும். அது டிரைவர் இல்லாது இரயில் ஓடுவதைப் போன்றது.

எல்லாம் இறைவனுடைய செயல் என்பது, இறைவன் என்ற பேரறிவின் கண்காணிப்பில் அனைத்தும் நிகழ்ந்து வருகிறது என்பதைக் குறிக்கிறது.

இறைவனுடைய கண்காணிப்பில் அனைத்தும் தாமாகவே நடக்கிறது. ஆகவே நாமாக முயன்று செய்யும் பொறுப்போ, சுமையோ நமக்குக் கிடையாது என்ற முடிவுக்கு வந்து விடுகிறோம்.

இரண்டையும் ஒன்றாக்கி விடுகிறோம். உண்மையில் அனைத்தும் தாமாக நடக்கின்றன என்பது வேறு, அனைத்தும் இறைவன் செயல் என்பது வேறு.

நம்முடைய மனதை நாம் வெளிமனது– **Conscious Mind**, அடிமனது– **Subconscious Mind**, ஆழ்மனது– **Deeper Conscious Mind**, என மூன்றாகப் பிரித்து விளங்கிக் கொள்கிறோம்.

வெளிமனது மட்டுமே நாம் அறியும்படி செயல்படுகிறது. மனது என்ற நிலையில் நாம், எதனையெல்லாம் அனுபவித்துத் தெரிந்து கொள்கிறோமோ அவை அனைத்தும் வெளி மனது மட்டுமே.

நம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான மன இயல்பு உண்டு. அந்த மன இயல்புதான் நம்முடைய அடி மனது ஆகும்.

ஆழ்மனது என்பது நம்மோடு தொடர்பு கொண்டிருந்தாலும் நமக்கு மட்டுமே அது சொந்தமானதல்ல. நம் அனைவருக்கும் பொதுவான ஒரு மனதையே பிரபஞ்ச மனம் அல்லது ஆழ்மனம் என்று குறிப்பிடுகிறோம்.

வெளிமனதோடு மட்டுமே நம்மால் தொடர்பு கொள்ள முடியும். நமது வெளிமனம் செயல்படுவதற்கான தூண்டுதல் நமது அடி மனதிலிருந்து ஏற்பட்டிருக்கலாம் அல்லது ஆழ்மனதிலிருந்து ஏற்பட்டிருக்கலாம்.

அது நமக்கு வெளிப்படையாகத் தெரியாது. நாம் வெளிப்படையாகத் தெரிந்து கொள்ளக் கூடியதெல்லாம் நம் வெளிமனதின் செயல்பாட்டை மட்டுமே ஆகும்.

நமது வெளிமனதும், அடிமனதும், மட்டுமே நமக்குச் சொந்தமாகும். ஆழ்மனம் என்பது இறைவனுக்கு மட்டுமே சொந்தமாகும்.

அந்த ஆழ்மனதின் இயக்கத்தின் மூலம் நம்முடைய வெளிமனது இயங்கும் போது மட்டுமே அது இறைவனுடைய செயலாக அமைகிறது.

வெளிமனது மற்றும் அடிமனதின் செயல்பாடோடு நிகழும் செயல்பாடுகள் அனைத்தும்

நம்முடைய தனிப்பட்ட செயல்பாடுகளே தவிர அவை இறைவனின் செயல்பாடுகள் அல்ல.

நம்முடைய வெளிமனது கூட இரண்டு பிரிவாக உள்ளது. அதில் ஒன்று Conscious எனும் உணரும் பகுதியாகவும், இன்னுமொன்று Unconscious எனும் உணராப்பகுதியாகவும் இருந்து வருகிறது. Memory எனப்படும் நமது நினைவுக் குறிப்புகள் யாவும் நம் வெளிமனதில் மட்டுமே இடம் பெற்றுள்ளன. நமது நினைவுக்கும் (Memory), அடிமனதுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது.

மெமரியின் உதவியோடு தான் நமது வெளிமனது செயல்படுகிறது. ஆனால் அந்த மெமரியானது நம் வெளிமனதின் இருளான பகுதியில் சேமிக்கப்பட்டுள்ளது. இந்த மெமரியிலிருந்து தான் நமது நினைவுகள் அனைத்தும் தோன்றுகின்றன. மெமரி அனைத்தும் இறந்து போன நினைவுக் குறிப்புகளேயாகும். அதிலிருந்துதான் உயிருள்ள நினைவுகள் தோன்றுகின்றன. ஒரு நெருப்புக் குச்சியை தீப்பெட்டியில் உரசும் போது தீக் குச்சியில் நெருப்பு தோன்றி எரிகிறது.

அந்த நெருப்பு எங்கிருந்து வந்தது? அது இன்னுமொரு நெருப்பிலிருந்து வரவில்லை. நெருப்பில்லாத ஓர் இடத்திலிருந்து தான் நெருப்பு தோன்றுகின்றது. நெருப்புக் குச்சியை உரசும் போது அதன் விளைவாக இப்படி அந்த நெருப்பு தானாகத் தோன்றுகின்றது. இதுதான் அதனுடைய இயல்பு. இப்படித் தான் மனம் இயங்கும் போது நினைவுகளும் தாமாக ஏற்படுகின்றன. இறைவன் அங்கே தலையிடுவதில்லை. நம்முடைய கர்ம வினையின் பதிவுகள் யாவும் நம்முடைய ஆழ்மனதான இந்த பிரபஞ்ச மனதில் பதிவாகியிருக்கின்றன.

கர்ம வினைகளின் செயலாக சில சந்தர்ப்பங்களில் நம்மை இயக்க வேண்டிய கட்டாயம் இறைவனுக்கும் ஏற்படுகிறது. அந்தச் சந்தர்ப்பத்தில் மட்டுமே இறைவனுடைய ஆணையின்படி நம்முடைய வெளிமனது இயங்குகின்றது. நம்முடைய வெளி மனது இயங்கும் போது அந்த மனதுக்கு, தானே இயங்குவது போல்தான் தெரியும்.

அடிமனதின் தூண்டுதலின்படி இயங்குகிறோமா அல்லது ஆழ்மனதின் தூண்டுதலின் படி இயங்குகிறோமா என்று அதற்குத் தெரியாது. வெளி மனது மற்றும் அடி மனதின் இயக்கமாக நம் மனம் இயங்கும் போது அது ஜீவனாகச் செயல்படும் ஜீவ வியக்தியின் செயலாக உள்ளது. ஜீவவியக்தியில் செயல்படுவதால் அதனை இழிந்த ஒன்றாகக் கருதிவிட வேண்டாம்.

பந்தத்துடன் செயல்படுவதும், முக்தியோடு செயல்படுவதும் கூட இந்த ஜீவ வியக்தியின் எல்லைக்கு உட்பட்டதே ஆகும்.

ஆழ்மனதின் தொடர்போடு செயல்படுவதால் முக்தி கிடைப்பதற்கான வாய்ப்பு எதுவுமே கிடையாது. அது ஈஸ்வர வியக்தியின் செயல்பாடாக இருந்தாலும் கூட முக்தியை வழங்கும் கடமை எதுவும் அதற்குக் கிடையாது.

அடிமனது மற்றும் வெளி மனதாகச் செயல்படும் ஜீவனுக்கு மட்டுமே முக்தியடையும் வாய்ப்பும் கடமையும் உள்ளது. நம் அகத்தில் தாமாக ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தையும் இயற்கையானது என, எதிர்ப்பின்றி ஏற்றுக்கொண்டு நமது புறச் செயலை மட்டும் நம் மன உணர்ச்சிகளின் அடிப்படையில் திறம்படச் செய்வதே நம் கடமையாகும்.

அகச் செயலையும், புறச்செயலையும் தாமாக நடக்கும் தற்செயல்களாக ஏற்றுக் கொள்வதால் நம்முடைய புற உலகச் செயல்கள் அனைத்தும் வளர்ச்சியின்றி முடங்கிப் போய் விடும் அபாயம் உள்ளது.

அகச்செயல்கள் அனைத்தையும் இயற்கையின் செயலாகவும்; இறைவனின் செயலாகவும், புறச்செயல்கள் அனைத்தையும் நமது செயல்களாகவும் ஏற்றுக் கொள்வதே அறிவுடைமையாகும்.

அகத்தே இறைவனாகவும், புறத்தே மனிதனாகவும் வாழ்வாங்கு வாழ்ந்திடுவோம்.

★



# மரண பயமும் விடுதலையும்

**V.A.P. சரவணன்** (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:** நான் பகவத் ஐயாவின் புரிதலை ஓரளவுக்கு புரிந்து இருக்கிறேன். என்னுடைய நடைமுறை வாழ்க்கையில் இயல்பாகச் சந்திக்கும் பிரச்சனைகளுக்குப் புரிதல் எவ்வாறு உதவுகிறது என்பதை பல நேரங்களில் அனுபவ ரீதியாக உணர்ந்திருக்கிறேன். ஆனால் நாம் சந்திக்கும் மிக சிக்கலான சூழ்நிலைகளில் உயிர் பயம் ஏற்படும் சூழ்நிலைகளில் இந்தப் புரிதல் எந்த அளவிற்கு உதவும்?

**பதில்:** நடைமுறை வாழ்க்கையில் யதார்த்தமாக எதிர் கொள்ளும் பிரச்சினைகளுக்குப் புரிதல் தீர்வாக அமைந்து உள்ளது என்பதை உணர்ந்திருக்கிறீர்கள். நாம் நிதானமாக இருக்கும் போது புரிதலைப் புரிந்து கொண்டு செயல்படுகிறோம். ஆனால் சிக்கலான மிக முக்கிய தருணங்களில் புரிதல் எவ்வாறு வேலை செய்யும் என்பதே உங்களின் பிரதான கேள்வியாக உள்ளது.

நமது பகவத் ஐயாவின் புரிதலைப் புரிந்து கொண்ட கம்பம் அக்குபங்சர் கல்லூரியில் மனம் என்ற பகுதியில் ஐயாவின் புரிதலையே பாடத்திட்டமாக வடிவமைத்திருக்கும் ஹீலர் உமர்பாரூக் அவர்கள் தான் சந்தித்த பயத்தையும் பிறகு புரிதல் எவ்வாறு உதவியது என்பதையும் நம்மிடையே பகிர்ந்து கொண்டார். இனி...

நானும் என்னுடைய நண்பர்கள் இருவரும் சேர்ந்து சுற்றுலா பயணமாக அந்தமான் தீவுக்குச் சென்றோம். அந்தமானிலிருந்து North bay தீவிற்கு கப்பல் மூலம் சென்றோம். அங்கு (Cuba diving) கடலுக்கு அடியில் 45 நிமிடம் சென்று பார்த்துத் திரும்பும் ஆச்சரியமான பயிற்சி நடைபெற்றது.

நான் இதுவரை Discovery Channel லில் தான் கடலுக்கு அடியில் சென்று பார்ப்பதை பார்த்திருக்கிறேன். எனக்கும் கடலுக்கு அடியில் சென்று பார்க்க வேண்டும் என்று ஆர்வமாக இருந்தது. எனக்கு நீச்சல் தெரியாது. இந்தப் பயிற்சிக்கு நீச்சல் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை என்று எழுதியிருந்தார்கள். அந்தப் பயிற்சியாளரிடம் "நான் கடலுக்கு அடியில் சென்று பார்க்கமுடியுமா?" என்று கேட்டேன். "நீங்கள் தாராளமாக இந்தப் பயிற்சியில் கலந்து கொள்ளலாம். நீச்சல் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை'' என்று கூறிவிட்டு, நீச்சல் தெரிந்திருப்பதை விடத் தெரியாமல் இருப்பதே இன்னும் கொஞ்சம் வசதி என்றார். அதனால் ஆர்வமாக பயிற்சியில் இறங்கினேன்.

நாம் எப்படி கடலுக்கு அடியில் செல்ல வேண்டும் என்று ஒரு பயிற்சியை கொடுக்கிறார்கள். நாம் கடலுக்கு அடியில் செல்வதற்காகத் தயாரிக்கப்பட்ட கருப்பு ஆடை, கண்ணுக்கு Zoom Class உடன் மூக்குக்கும் சேர்ந்த முகமூடி (Mask) மற்றும் ஆக்ஸிஜன் சிலிண்டருடன் (Oxigen Cylinder) இணைக்கப்பட்ட டியூபும் (Tube) கொடுக்கிறார்கள். கடலுக்கு அடியில் மூக்கில் சுவாசிக்க கூடாது வாயில் மட்டுமே சுவாசிக்க வேண்டும் என்ற முக்கிய அறிவிப்போடு நமக்கு வேறு ஏதாவது சுவாச நோய், மூச்சுத் திணறல் எதுவும் இல்லையா என்பதையும் தெரிந்து கொள்கிறார்கள். தேவையில்லாமல் கை, கால்களை எல்லாம் ஆட்ட வேண்டாம் என்று கூறுகிறார்கள். நமக்கு 4 சைகைகள் (Sign) சொல்லி கொடுக்கிறார்கள். கடலுக்கு அடியில் நமக்கு மூச்சுவிட சிரமமாக இருந்தால் ஒரு சைகை (Sign), இன்னும் கடலுக்கு அடியில் செல்ல வேண்டும் என்றால் ஒரு சைகை (Sign), கடலுக்கு மேலே வரவேண்டும் என்றால் ஒரு சைகை (Sign) என்று சொல்லிக் கொடுகிறார்கள். மேலும் நமது ஆடைக்கு பின்னால் உள்ளடக்கமாக காற்றை நிரப்பக் கூடிய பலூன் (Air Balloon) பொருத்தப்பட்டுள்ளது.

நமக்கு ஏதாவது சிக்கல், தடுமாற்றம் என்றால் அந்தப் பலூனுக்கான பட்டனை அழுத்தினால் பலூனில் காற்று நிரப்பப்பட்டு வெகுவிரைவாகக் கடலுக்கு மேலே வந்து விடுவோம். இது போகவும் நமக்கு மிக அருகிலே உதவுவதற்காக ஒரு பயிற்சியாளரும் உடன் வருகிறார்.

முதலில் கடலுக்கு மேலே பயிற்சி கொடுக்கப்படுகிறது. மூக்கின் வழியாக சுவாசிப்பதற்குப் பதிலாக வாயின் வழியாக சுவாசிக்க வேண்டும். என்று அறிவுறுத்தப்படுகிறது இது தான் மிக முக்கியமான விசயம். இதற்காகத் தரையில் 15 நிமிடம் பயிற்சி அளிக்கப்படுகிறது, பிறகு தண்ணீருக்கு அடியில் நமது தலைமட்டத்திற்கு கீழ் சென்று இந்தப் பயிற்சியை செய்து பார்க்க பயிற்சி அளிக்கப்படுகிறது. இதில் நாம் மூக்கில் சுவாசிக்காமல் வாயில் சுவாசிக்க வேண்டும் இதில் தகுதி பெற்ற பிறகு நம்மை கடலுக்கு அடியில் அழைத்துச் செல்கிறார்கள்.

கடலுக்கு அடியில் கிட்டத்தட்ட 7 முதல் 12 மீட்டர் வரை ஆழத்திற்கு அழைத்துச் செல்கிறார்கள். முதலில் கடல் மட்டத்திற்குக் கீழ் செல்கிறோம். பிறகு கொஞ்சம், கொஞ்சமாக ஆழத்திற்கு செல்கிறோம். பவளப்பாறைகள், கடல் மீன்கள் என அனைத்தையும் நம்மால் நன்றாக பார்க்க முடிகிறது. பவளப்பாறைகள், வித்தியாசமான தாவரங்கள் என கடலுக்கு அடியில் ஒரு பெரிய உலகமே இருப்பதை நாம் பார்க்கிறோம்.

பவளப்பாறைகளை கடந்து ஆழமாக உள்ள பகுதிக்கு அழைத்துச் செல்கிறார்கள். ஆழத்திற்குச் செல்லும் போது சுற்றிலும் கடல் (Deep Blue Sea) நீலநிறமாகக் காட்சி அளிக்கிறது. நம்மைச் சுற்றிலும் மேலும், கீழும் என எங்கும் தண்ணீர் நீல நிறமாகக் காட்சி அளிக்கிறது.

நாம் கடலுக்கு அடி ஆழத்தில் இருக்கிறோம்

என்ற உணர்வு ஏற்பட்ட உடன் எங்கிருந்தோ திடீரென மனதில் ஓர் இனம் புரியாத பய உணர்வு ஏற்பட்டது. பய உணர்வு ஏற்பட்டதும் பதட்டமும் ஏற்படுகிறது. பதட்டம் ஏற்பட்டவுடன் வாயில் சுவாசிப்பதற்கு பதிலாக இயல்பாக சுவாசிப்பது போல் மூக்கில் சுவாசித்து விடுகிறேன். என்னுடைய நிலை தடுமாறி போய் விடுகிறேன். கடலுக்கு மேலே செல்லலாம் என சைகை கொடுக்கிறேன். உடனே பலூனின் உதவியால் கடலுக்கு மேலே வந்து விடுகிறேன்.

கடலுக்கு மேலே வந்தவுடன் கண்ணாடி, முகமூடி உள்ளிட்ட அனைத்தையும் கழற்றிவிட்டு மூச்சை இழுத்து, இழுத்து விட்டு என்னை ஆசுவாசப் படுத்திக் கொள்கிறேன். நமக்கு என்ன நிகழ்ந்தது என்று யோசித்துப் பார்க்கிறேன். பயமும், பதட்டமும் ஏற்பட்ட வுடன் வாயில் சுவாசித்துக்கொண்டிருந்த நாம் கவனமின்றி மூக்கில் சுவாசிக்கத் தொடங்கி விட்டோம். அதனால் காதிலும் மூக்கிலும் தண்ணீர் போக தொடங்கி நம்மை நிலை தடுமாற செய்து விட்டது என்பதைப் புரிந்து கொள்கிறேன். நான் பதட்டத்திலிருந்து நிதானத்திற்கு வந்தவுடனே பகவத் ஐயாவின் புரிதல் தான் நினைவுக்கு வந்தது.பயம் என்ற உணர்வு நாம் சந்தித்த சூழ்நிலைக்கு இயல்பாக தாமாக ஏற்பட்டுள்ளது. அப்படி ஏற்பட்ட பயத்துடன் நான் போராடும் போது பதட்டம் ஏற்படுகிறது. அதனால் பயம் வலுப்பெறுகிறது. பயமும் பதட்டமும் வலுவடைந்த நிலையில் பயிற்சி மறந்து போகிறது. வாய் வழி சுவாசம் மூக்கு வழியாக மாறிவிடுகிறது. நான் நிலை குலைந்து தடுமாறிப் போய்விடுகிறேன் என்பது எனக்கு நன்றாகப் புரிந்தது. பயம் அந்தக் கணத்தில் முற்றிலுமாக எங்கிருந்து வருகிறது, என்பது எப்படி வருகிறது என்பது தெரியவில்லை.

இப்போது பயிற்சியாளர் நீங்கள் விரும்பினால் 2 நிமிடத்திற்கு பிறகு மீண்டும் செல்லலாம் என்று கூறுகிறார். நான் இந்த முறை சென்று பார்ப்போம் என்று சரி என்று பதிலளிக்கிறேன். மீண்டும் எல்லாவற்றையும் மாட்டிக்கொண்டு கடலுக்கு அடியில் செல்கிறேன். இப்போது மீண்டும் கடலின் ஆழமான பகுதிக்கு செல்லும் போது வாயில் சுவாசிப்பதிலே கவனம் முழுமையாக இருக்கிறது. வாய்வழி சுவாசித்துக் கொண்டே மனதைக் கவனிக்கிறேன். மனதிலிருந்து பயம் வருகிறது. ரொம்பவே அழகாக பயம் மனதிலிருந்து வருவது தெரிகிறது.

இதற்கு முன்பு சாதாரண நிலைகளில் பயத்தை உணர்ந்ததை விட கடலுக்கு அடியில் இந்தச் சூழ்நிலையில் பயத்தை உணர்வது பல மடங்கு ரொம்பவே தனித்துத் தெரிந்தது. அந்தப் பயத்தை வெறும் பார்வையாளராக இருந்து பார்ப்பது என்பது முழுமையாக எனக்கு கிடைத்தது. இப்போது அந்தப் பய உணர்வு சிந்தனையாகாமல் (Thinking) தனியாகப் பயம் என்ற உணர்வாக மட்டுமே இருப்பது நன்றாகத் தெரிந்தது. பயம் வருவதை வெறுமனே பார்த்துக் கொண்டு இருக்கிறேன். பயத்திற்கு முக்கிய கவனம் கொடுப்பதை விட்டவுடனே இயல்பாக ஆழத்திற்கு சென்று கொண்டே இருந்தேன்.

இப்போது நான் ஒரு சோதனையாகவே எனக்கு ஏற்பட்ட பயத்தை லேசாக சிந்தனை (Thinking) செய்து தொட்டுப் பார்க்கிறேன். அப்படியே உடல் நிலை தடுமாற்றம் கொள்கிறது. இப்போது நான் தெரிந்தே பயத்தை Thinking செய்து பார்ப்பதால் உடல் தடுமாற்றம் கொள்வதையும் பிறகு நானாக Thinking விட்டவுடன் உடல் சமநிலை அடைவதையும் பார்க்கிறேன். இந்த முறை கடலுக்கு அடி ஆழத்திலே எவ்வளவுதான் கடலுக்கு அடியில் மீன்கள், பவளப் பாறைகள் எனப் பார்த்தாலும் கவனம் முழுவதும் மனதின் மீதே தான் இருந்தது. என்னுடைய முதன்மையான கவனம் மனதில் மட்டுமே இருந்தது, பவளப்பாறைகள், மீன்கள் எனக் கடலின் ஆழத்தின் அழகைப் பார்ப்பது என்பது இரண்டாம் பட்ச தன்மையைத் தான் பெற்றது. கிட்டத்தட்ட கடலுக்கு அடியில் ஒரு **Meditation**-க்கு போனது போன்ற நிலையே இருந்தது.

இது பொதுவாக சாதாரணமாக எல்லோரும் போய் வருவதுதான். ஆனால் நமக்கு ஐயாவின் புரிதலினால் எப்படி மனதிலிருந்து பயம் வருகிறது, நாம் எப்படிப் பயத்தை எடுத்து சிந்தனை (Thinking) செய்து நம்மை நாமே பலவீனப் படுத்திக் கொள்கிறோம். பிறகு பயத்தைப் பற்றிய Thinking-லிருந்து விடுபட்டு எப்படிச் சமநிலை அடைகிறோம் என்பதை, கடலுக்கு அடி ஆழத்தில் மிகவும் சிக்கலான சூழ்நிலைகளிலும் இந்த புரிதலை சற்றுக் கூடுதலாகப் புரிந்துகொள்ள முடிந்தது. இப்படிச் சிக்கலான சூழ்நிலைகளில் கூடப் புரிதல் நம்மை மீட்டு எடுக்கிறது என்பதை புரிந்து கொண்டேன்.

கிட்டத்தட்ட கடலுக்கு அடியில் 30 நிமிடத்திற்கு மேலே எந்தப் பதட்டமும் இல்லாமல் நிதானமாக இருக்க முடிந்தது. பிறகு பயிற்சியாளர் நேரம் முடிந்துவிட்டது கடலுக்கு மேலே செல்லலாம் என கூறிய பிறகு தான் கடல் மட்டத்திற்கு மேலே வந்து சேர்ந்தேன். இந்த முறை இயல்பாகவே ஒரு நிதானம் இருந்தது. இந்தக் கடல் அனுபவம் சிக்கலான சூழ்நிலையிலும் புரிதலுடன் நிதானமாக இருக்க முடியும் என்பதை புரிய வைத்தது என்று தன்னுடைய அனுபவத்தைக் கூறி முடித்தார்.

பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புரிதல் நடைமுறை வாழ்க்கையில் நாளடைவில் நம்முடைய சொந்தப் புரிதலாகவே மாறிவிடுகிறது. அது நம்முடையதாக மாறிவிடுகிறது. பிறகு அந்தப் புரிதலே நாம் சந்திக்கும் எல்லா சூழ்நிலைகளையும் எதிர்கொள்வதற்குத் தேவையான சுய ஒளியாக இருந்து செயல்பட தொடங்குகிறது. நமக்கு நாமே சுயஒளியாக மாறிவிடுகிறோம். வாழ்க்கையில் இவ்வளவு நாட்களாக இருந்து வந்த பதட்டம், பயம் போன்றவற்றிலிருந்து வெகு விரைவாக நிதானத்திற்கு வரும் தன்மைக்கு நாம் வந்துவிடுகிறோம்.

**“புரிதலே சுய ஒளி”.**







## ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

வாழ்வில் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய மிக முக்கியமான தத்துவம் “தன்னை அறியும் ஞானம்” எந்த ஒன்றை அறிந்துகொண்டால் அகத்தளவில் எல்லாவற்றிலிருந்தும் விடுதலை பெற முடியுமோ அதுவே இந்த ஞானம்.

அதனால் தான் ‘தன்னை அறிந்திடில் தனக்கொரு கேடில்லை’ என்று ஞானிகள் சொன்னார்கள்.

துன்பத்திலிருந்து விடுதலை பெறவே ஒவ்வொருவரும் ஆன்மிகத்தின் பக்கம் கவனத்தைத் திருப்பி தேடுதலில் ஈடுபடுகிறோம். தன்னை அறிந்து கொள்ளும் இடம்தான் தேடுதல் முடிவு பெறும் இடம்.

தேடுதல் கொண்டவர்களுக்கு இதுவரை வந்த ஞானிகள் பலரும் தாங்கள் பெற்ற ஞானத்தை அவரவர்கள் அறிந்த கோணத்தில் எடுத்துரைத்தார்கள். அந்த வகையில் வந்த ஞானிகளே இரமணர், ஜே.கே, மற்றும் ஓஷோ போன்றவர்கள். மேலும் ஞானத்தை வழங்கவே யோகவாசிஷ்டம், வேதம் போன்ற நூல்களும் ஞானிகளால் எழுதப்பட்டன.

இத்தனை ஞானிகளும் எடுத்துரைத்தாலும் தேடுதல் கொண்டவர்களால் ஞானத்தை எளிதாக அடைய முடியவில்லை. அவர்கள் கூறிய தத்துவத்தில் உள்ள உயர்வைப் புரிந்துகொள்ள முடிகிறதே தவிர உண்மையைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

ஏனெனில் அவர்களின் கூற்றே முன்னுக்குப் பின் முரணாக உள்ளது. ஓரிடத்தில் ஒரு விதமாக கூறிவிட்டு இன்னொரு இடத்தில் வேறுவிதமாக கூறியிருப்பதாகத் தோன்றுகிறது. இதைப் படிக்கும் போது நமக்கு என்ன தோன்றும், அந்த ஞானி சரியாகத் தான் கூறியிருப்பார். நாம் தான் சரியாக புரிந்து கொள்ளும் பக்குவத்திற்கு இன்னும் வரவில்லையோ என்று தோன்றும். நம்மிடம் குறைபாடு உள்ளதாகவே எடுத்துக் கொள்வோம்.

இந்நிலையில் இயற்கையின் கொடையாக நமக்கு கிடைத்திருப்பவர் தான் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள். தான் 40 ஆண்டுகளாக தேடிக் கிடைத்த ஞானம் அரை நொடியில் புரிந்து கொள்ள கூடிய விசயம் என்று உணர்ந்து உரைத்தவர்.

ஞானிகளை வணங்குவது சிறப்பல்ல நீங்களே ஞானியாய் மலர்வது தான் சிறப்பு என்று கூறியவர்.

காலங்காலமாக பல பயிற்சி முயற்சிக்கு பிறகும் எங்கோ யாருக்கோ ஒருவருக்குத் தான் ஞானம் கிடைக்கும் என்ற நிலையை மாற்றி ஞானத்தை எளிதாக்கி உண்மையைப் புரிதலின மூலம் வழங்கியவர்.

பகவத் ஐயா வழங்கும் புரிதலைப் புரிந்து கொண்டவர்களால் மற்ற ஞானிகள் எதைக் கூற வருகிறார்கள் என்பதையும் புரிந்துகொள்ள முடிகிறது.

அந்தளவிற்கு உண்மையை எளிமையாக எடுத்துரைத்தவர் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள்.

இந்த ஞானப்புரிதலை புரிந்து கொண்ட பின்பும் கூட பலர் மற்ற ஞானிகள் கூறிய கருத்துக்களை சுமந்துகொண்டு இருக்கிறார்கள்.

இந்த உண்மையை எப்போது புரிந்துகொண்டோமோ அப்போதே இது நமக்கு சொந்தமான புரிதலாக மாறிவிடுகிறது. இந்த ஞானம் நமது சொந்த ஞானமாக மாறிய பிறகு நாம் மற்ற ஞானிகள் சொன்ன கருத்தையோ மற்ற ஞானிகளையோ பின்பற்ற வேண்டிய அவசியமில்லை. முழுமையாகப் புரிந்து கொண்டவர்கள் அனைவரும் சுயஒளி பெற்றவர்கள். அவர்கள் சொந்தக் காலில் நிற்பதுவே சரியானதாகும்.

இந்தப் புரிதலில் மேலும் ஒரு சிறப்பு என்னவென்றால், இதைப் புரிந்து கொண்ட நாமும் தேடுதல் உள்ளவர்களுக்கு எளிதாகப் புரியும்படி எடுத்துரைக்கும் தன்மைக்கு வந்துவிடுகிறோம்.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த இந்தப் புரிதலிலும் ஒரு சிறு குறைபாடு உள்ளதாகத் தோன்றுகிறது. எது பலமோ அதுவே பலவீனமாகவும் உள்ளது. இந்த ஞானத்தைத் தேடுதல் கொண்டவர்கள் அனைவரும் புரிந்து கொள்ளக் காரணம் அதன் எளிமை,

இந்த எளிமையே இந்த ஞானத்தை தவறவிடவும் காரணமாக அமைந்து விடுகிறது. ஏனெனில் இதைப் புரிந்து கொண்டவர்கள் கூட அவர்கள் புரிந்துகொண்ட கோணத்தில் எளிமையாக மற்றவர்களுக்கு எடுத்துரைப்பதை விடுத்து, புரிந்து கொள்வதற்கு சிரமமான மற்ற ஞானிகளின் கருத்துக்களை வழிமொழிகிறார்கள். புரிந்துகொள்வதற்குக் கடினமான தத்துவங்கள் அனைத்தும் உயர்வாக தோன்றும். ஆனால் உதவாது. புரியாதவரை அது எட்டாக்கனியாக இருக்கிறது. புரியாத வரை அவர்கள் தேடுதலும் நிறைவடையாது. ஆனால் உண்மை எப்பொழுதும் எளிமையானது, நிதர்சனமானது.

ஆகாயம் பிரமாண்டமானதா, சாதாரணமானதா? பிரமாண்டமானதுதான் அதை தலை நிமிர்ந்து தான் பார்க்கிறோம். ஆனால் நம் காலடியில் இருப்பதும் அதே ஆகாயம் தான். பிரபஞ்சம் முழுவதும் நீக்கமற நிறைந்திருப்பது ஆகாயம் தான்.

அதுபோல்தான் உண்மையும். உண்மை என்பது எப்பொழுதோ எங்கோ எதிர்காலத்தில் நிகழக் கூடிய ஒன்று அல்ல. நிகழ்காலத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கக்கூடியது. உயர்வானதும் அதே சமயத்தில் சர்வ சாதாரணமானதும் கூட. இதைப் புரிந்து கொண்ட நாம் நம் சொந்தக் காலில் நிற்பதே சரியானதாகும்.

அதை விடுத்து புரிந்த கொண்ட நாமும் "ஓஷோ இதைச் சொன்னார், ரமணர் இதைச் சொன்னார், ஜே.கே. இதைச் சொன்னார்" என்று அவர்களின் கருத்துகளை மற்றவர்களிடம் எடுத்து உரைக்கும் போது அதனால் கேட்பவர்கள் எந்தப் பயனும் அடையப் போவதில்லை. தான் பெற்ற தெளிவையும், புரிந்த கொண்ட விதத்தையும் எளிமையாக எடுத்துரைக்கும் போது கேட்பவர்களுக்கு பயனுள்ளதாகவும் அமையும் அவர்களின் கேள்விகளுக்குச் சரியான விளக்கமும் கொடுக்க முடியும்.

அனைத்துத் தத்துவங்களையும் உண்மைகளையும் புரிந்து கொள்வதற்கு முழுமுதற் காரணமாக இருக்கும் இந்த ஞானம் கூட ஸ்ரீ பகவத் ஐயாவால் கிடைக்கப்பெற்றதுதான். இருப்பினும் அவர், தன்னைப் பின்பற்ற சொல்லவில்லை.

அனைவரும் அவரவர் சொந்தக் காலில் நிற்க வேண்டும் என்றுதான் விரும்புகிறார். அதுதான் அவர் சிறப்பு. நடக்கத் தெரியும் வரை நமக்கு ஊன்று கோல் தேவைப்படலாம். நடக்கக் கற்றுக்கொண்ட பிறகு நாம் சொந்தக் காலில் தான் நடக்க வேண்டும். அதுதான் நமக்கு சிறப்பு. யாரையும் பிரதிபலிக்காமல் நாமும் சுய ஒளியாக இருப்பது தான் நமக்கு சிறப்பு.

பிரதிபலிப்பவர்கள் தன்னை வெளிக்காட்டிக் கொள்ளலாமே தவிர ஒருபோதும் மற்றவர்களுக்கு ஒளி கொடுக்க முடியாது.

சுயஒளி பெற்றவர்களே மற்றவர்களையும் சுயஒளி பெறச்செய்ய முடியும்.

புரிந்துகொள்வோம்....புரிதலை தமதாக்கிக் கொள்வோம்.... அனைவருக்கும் ஒளி கொடுப்போம்....

## ஸ்ரீ பகவத் பவன்




## வேண்டுகோள்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவன் இல்லத் திறப்புவிழாவைத் தொடர்ந்து மீண்டும் கட்டடத்தின் முதல் மற்றும் இரண்டாம் தளத்தின் வேலைகள் தொடங்கப்பட்டு விறுவிறுப்பாக நடைபெற்று வருகின்றன. சென்ற மாத இதழில் இதுவரை நன்கொடையாக வந்தத் தொகையையும் இன்னும் மீதி வேலைகளை நிறைவு செய்ய நிதித் தேவையின் விபரத்தையும் தெரிவித்திருந்தோம்.

கட்டடவேலைகளை ஏப்ரல் மாதம் இறுதிக்குள் முடிக்கவேண்டும் என்று முழுவீச்சில் செயல்படுவதால் உடனடியாக நிதி தேவைப்படுகிறது. இதுவரை ஆன செலவுகள் பலரின் பங்களிப்பையும் தாண்டி வட்டியில்லாக் கடனாகவும் சிலரிடம் பெற்று நடைபெற்று வருகின்றன. எனவே தங்களது பங்களிப்பை விரைவாக வழங்கி உதவிடுமாறு பணிவன்புடன் வேண்டுகிறோம்.

மேலும் வாய்ப்புள்ளவர்களிடம் அவசர நிதி தேவையின் காரணமாக வட்டியில்லா கடனாக வாங்கி 2 ஆண்டுக்குள் திருப்பிச் செலுத்திவிடவும் திட்டமிட்டுள்ளோம்.

இப்படி வட்டியில்லாக் கடனாகப் பெறப்படும் பணம், 24 மாதத்திற்குள் கண்டிப்பாகத் திருப்பித் தருவதாக உறுதியளிக்கப்படுகிறது.

எனவே ஏற்கனவே நன்கொடை வழங்கியவர்கள் கூட வாய்ப்பிருந்தால் நிதியை வட்டியில்லாக் கடனாக வழங்கி கட்டடத்தை நிறைவு செய்ய உதவிடுமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

– ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

இதுவரை நன்கொடையாக ரூ.25,000/-மும் அதற்கு மேலும் கொடுத்து தங்களை ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக (Founders) இணைத்துக் கொண்டவர்கள்...

## ஆத்மஞானி தேனிசுவாமி மற்றும் சுவாமி ஸ்வரூபானந்தா இவர்களோடு...

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
2. திரு. **E.ராமு,** சென்னை.
3. திரு. **சிவகுரு,** கரூர்.
4. திரு. **S.முருகேசன்,** சென்னை,
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை.
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை.
8. திரு. **ஜீவமணி,** சேலம்.
9. திரு. **சரவணன்,** சேலம்.
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்.
11. திரு. **குணாலன்,** கோவை.
12. திரு. **வெங்கட்ராஜ்,** சேலம்.
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. Dr. **நாராயணசாமி & செந்தமிழ்செல்வி** சென்னை.
15. திரு. Eng. **முரளி** சென்னை.
16. திருமதி.**வடிவுஅம்மாள் & சம்பந்த** முதலியார்
17. திரு. **முத்துச்செல்வன்,** காஞ்சிபுரம்.
18. திரு. **S.கதிர்வேலவன்,** சென்னை.
19. திருமதி. **சிவசங்கரி,** சென்னை.
20. திரு. **ரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை
21. திருமதி. Dr. **விஜயலட்சுமி,** சென்னை
22. திரு. **S.பாலமுருகன்,** USA
23. திரு. **செந்தில்,** தர்மபுரி.
24. திரு. **சரவணன்-முத்துலட்சுமி,** குடும்பத்தினர், சென்னை.
25. திரு. **புலியூர் உடையான்,** சென்னை.
26. திரு. **சரவணன்,** புரசைவாக்கம்.
27. திரு. **சந்திரசேகர்,** வலசரவாக்கம்.
28. திரு. **வெங்கடேஸ்வரராவ்-சிந்தாநிலாதேவி,** பாண்டி.
29. திரு. **மாரிமுத்து,** சென்னை.
30. திரு. **சந்திரசேகர் &** சகோதரர் திரு. **திருமூர்த்தி**
31. திரு. **தேவா ஸ்ரீராம் & தேவாஸ்ரம்** வெள்ளாளப்பட்டி.
32. திரு. **அப்துல் சாகுல் ஹமீது** நாகர்கோயில்
33. திரு. **வேலுசாமி** பெங்களூரு.
34. திரு. **சுரேஷ்குமார்** சேலம்.
35. திருமதி. **S. லட்சுமி லாவண்யா** சேலம்.
36. செல்வி. **S. வைஷ்ணவி** சேலம்.
38. திரு. **முத்துச் செல்வன்** நாகப்பட்டிணம்.
39. திரு. **கார்த்திகேயன்** மற்றும் **குடும்பத்தினர்** சிங்கப்பூர்
40. திரு. **ரவிச்சந்திரன்** பொள்ளாச்சி.
41. திரு. **செந்தில்** (Nigeria) சென்னை.
42. திரு. **ஜெயராமன்** கனடா.
43. திரு. **பாபுலால்** பெங்களூரு.
44. திருமதி. **ஹேமா** அமெரிக்கா.
45. திரு. Dr.**ராஜசேகர்** திருச்சி.
46. திரு. **வேலுமணி** பெருந்துறை.
47. திரு. **உமர் பரூக்** கம்பம், தேனி.
48. திரு. **M.ராஜகோபாலன்** ( கோவை மாருதி பேப்பர் ) பரமத்தி.
49. திரு. **சசிகுமார்** கோவை.
50. திரு. **அன்புசேகர்** நெய்வேலி.
51. திருமதி. **தேவி,** மலேசியா.
52. திரு. **சீத்தல்குமார்,** மயிலாடுதுறை.
53. திரு. **பாலு,** பரமத்திவேலூர்.
54. திரு. **மணிவண்ணன்,** திருச்சி
55. திரு. **ரவிக்குமார்,** நாகப்பட்டணம்
56. திரு. **G. வெங்கடேஷன்,** மதுரை
57. திரு. **சுந்தரராமன்,** மும்பை
58. திரு. **சின்னம்மாள்,** நெல்லை
59. திரு. **கணேஷ்குமார்,** கோயில்பட்டி
60. திரு. **P.சுந்தரராஜன்,** சென்னை
61. திரு. **சிவக்குமார்,** காங்கேயம்
62. திரு. **ஜோசப் ஜெயராஜ்,** ஹைதராபாத்
63. திரு. **பழனியப்பா பிரபு,** கோவை
64. திரு. **மயில்வாகனம்,** மதுரை
65. திரு. **ரகு,** தர்மபுரி
66. திரு. **நாகராஜன்,** தூத்துக்குடி
67. திரு. **பெரியசாமி,** திருச்சி
68. திரு. **ரவி,** ஆந்திரா
69. திரு. **இராதாகிருஷ்ணன்,** சிங்கப்பூர்
70. திரு. **ஹரிகிருஷ்ணன்,** சென்னை
71. திரு. **ஞானசம்பந்தம்,** சென்னை
72. திரு. M.V. **பாலன்,** காரைக்குடி
73. திரு. **சங்கர நாராயணன்,** கும்பகோணம்
74. ஆடிட்டர். திரு.**ஜெயகோபி** & திருமதி. **பிரேமலதா,** சேலம்
75. திரு. **செந்தில்,** டைலர், திண்டுக்கல்
76. திரு. **நவராஜா,** ஜெர்மனி
77. திரு. **Hr. தேவராஜன்,** சேலம்
78. ஜோதிடர். **ஆறுமுகம் தியாகராஜன்,** செகன்ராபாத்
79. திரு. **ரவி,** சென்னை
80. திரு. K.S. **இராமமூர்த்தி** & திருமதி **விஜயகுமாரி,** சென்னை
81. திரு. **வெங்கட்டராமன்,** (டீக்கடை) மறைமலை நகர், சென்னை.
82. திரு. **சிவச்சந்திரன்** & திருமதி. **சாந்தி** குடும்பத்தினர், சென்னை.
83. திரு. **G.பாலசுந்தரம்,** சென்னை
84. திரு. **சுந்தர் விபாகரன்,** சென்னை
85. திரு. **விஜயலிங்கம்,** சென்னை
86. திரு. Dr.**கார்த்திக்,** திருக்கழுக்குன்றம்
87. திரு. **நந்தகுமார்,** T.நகர், சென்னை
88. திரு. **K.R.யுகேஷ்குமார்,** சென்னை
89. திரு. **சரவணன் அங்கப்பன்,** பெங்களூர்
90. திரு. **இராஜசேகர்,** பெங்களூர்
91. திரு. **பாண்டி பரமசிவம்,** சென்னை
92. திரு. **துரைசாமி,** M.O.C சேலம்
93. திரு. A.P. **வேலாயுதம் & சந்திரகலா** குடும்பத்தினர், சேலம்
94. திரு. **சுதாகர்,** திருச்சி
95. திரு. **சவுந்தரராஜன்,** Sri Ram Chitfunds சென்னை
96. திரு. **ஆனந்தகுமார்,** ஆணைக்கட்டி, கோவை
97. திரு. Eng. **நந்தகுமார்,** சேலம்
98. திரு. **R.அனிஸ்குமார்,** கோவை
99. திரு. **சீனிவாச பிரசாத்,** பேங்களூர்
100. திரு. **கோபி கார்த்திகேயன்,** Advocate, திருவண்ணாமலை.

101. திரு. ஜோதிடர். **இரமேஷ் ராஜகோபால்,** சென்னை.
102. திரு. **கணேசன்,** குடும்பத்தினர், சென்னை.
103. திரு. **ஜெயச்சந்திரன்,** பெங்களூரு.
104. திரு. **T.சிவக்குமார்,** நாகப்பட்டணம்.
105. திரு. **சீதாராமன்,** பெரம்பூர், சென்னை.
106. திரு. **தேவராஜ்,** பெரம்பூர், சென்னை.
107. திரு. **ஸ்ரீகாந்த் & உஷா,** மாங்காடு சென்னை.
108. திரு. **சங்கர்,** வெஸ்ட் மாம்பலம்.
109. திரு. **ரவிசங்கர்,** சேலம்.
110. திரு. **முருகேசன்,** இராசிபுரம்.
111. திரு. **மூர்த்தி,** ( குரு ஊறுகாய் ) நெல்லை.
112. திரு. **நவநீதம்,** நாகப்பட்டணம்.
113. திரு. **அருணாச்சல சாந்தி,** நெல்ல.
114. திரு. **ரகுராம்,** சென்னை.
115. திரு. **G.S.மணி,** சென்னை.
116. திரு. **ஸ்ரீனிவாசன்,** சென்னை.
117. திரு. **விபுலானந்தன்,** சென்னை.
118. திருமதி. **அபிராமி,** சென்னை.
119. திரு. **A.T.சக்திவேல்,** சேலம்.
120. திரு. **சங்கரி,** கடலூர்.
121. திரு. **சேனாதிபதி,** ஒட்டன்சத்திரம்.
122. திரு. **ரமேஷ் ராமநாதன்,** பேங்களூர்.
123. திரு. **மனோகர் ராஜா,** சேலம்.
124. திரு. **S.இராஜசேகர்,** நெல்லை.
125. திரு. **ஸ்ரீனிவாசன்,** அரும்பாக்கம், சென்னை.
126. திரு. **சித்தார்தன்,** சென்னை.
127. திருமதி. **பிரேம் சங்கீதா,** பேங்களூர்.
128. திரு. **P.பாஸ்கர்,** M/s. Marktech Industries, Mumbai.
129. திரு. **முகமது அப்துல் காதர்,** நெய்வேலி.
130. திரு. **வசந்த்,** திருச்சி.
131. திரு. **K.சேகர் & பெரியசாமி,** பாலாஜி எக்ஸ்போர்ட், சேலம்.
132. திரு. **வெங்கடேஷ்,** இளம்பிள்ளை.
133. திரு. **குணசேகரன்,** ஆடிட்டர், சேலம்.
134. திரு. **கோபால்,** (A.B. Plaid) பெங்களூரு.
135. திரு. **சண்முகம்,** ( விஜய் கேஸ் ) சேலம்.
136. திரு. **ஸ்ரீனிவாசன் சேதுராமன்,** சென்னை.
137. திரு. **சாமி ஐயா,** செங்கோட்டை.
138. திரு. **கோவிந்தராஜன்,** சென்னை.
139. திரு. **கல்யாண சுந்தரம்,** சென்னை.
140. திரு. **மாரிசெட்டியார்,** சேலம்.
141. திரு. Dr.**அருளானந்தம்,** தாராபுரம்.
142. திருமதி. **சாந்தி,** நாகப்பட்டிணம்.
143. திரு. **V.J.சிவக்குமார்,** சேலம்.
144. திரு. **கோதண்டபாணி,** குன்னூர்.
145. திருமதி. **ராதா அம்மாள்,** சிங்கப்பூர்.
146. திரு. **சுப்ரமணி,** பாண்டிச்சேரி.
147. திரு. **KMLST. பிரபு**
148. திரு. **சொக்கலிங்கம்,** மதுரை.
149. திரு. **K.J.சங்கர்**
150. திரு. **K.சுவாமிநாதன்,** சென்னை.

## நன்கொடைகளை வழங்க....

1. **HDFC BANK- SRI BAGAVATH MISSION** A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590
2. **STATE BANK OF INDIA - SRI BAGAVATH MISSION** A/c No. 31784345329, NEFT IFSC: SBIN 0012772

என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் 97891 65555 என்ற கைப்பேசி எண்ணிற்குத் தகவல் தெரிவிக்க அன்புடன் வேண்டுகிறோம்.



திருவண்ணாமலையில் ஐயாவுடன் கன்னடா ஜெயராமனும், சந்திரசேகரும்



"கவலைகள் அனைத்திற்கும் தீர்வு" தெலுங்கு நூலை பகவத் ஐயா வெளியிட ஹைதராபாத் திருமதி. மங்கள கௌரி அவர்கள் பெற்றுக் கொள்கிறார்.



ஜென் கதை

# வெற்றியின் சூட்சமம்

ஒரு போர் தளபதி இருந்தான். அவன் தன் பகைவனுடைய படை பலத்திலும் போர் வீரர்களின் எண்ணிக்கையிலும் பாதி மட்டுமே பெற்றிருந்தான். தன் நாட்டைத் தாக்கவரும் பகைவனின் படையை எதிர்த்துத் தாக்க முடிவு எடுத்தான்.

தளபதி அவனுடைய வீரர்களின் திறமையை நன்கு அறிந்திருந்தான். எனவே தன் வெற்றியின் மீது தளபதிக்குப் பெரிய நம்பிக்கை இருந்தது.

ஆனால், அவனது போர் வீரர்களுக்கு திறமையிருந்தாலும் தங்களது வெற்றியின் மீது நம்பிக்கை இல்லை.

போர் வீரர்கள் வேறு வழியின்றி தளபதியின் ஆணைக்கிணங்க தயக்கத்துடன் போருக்குப் புறப்பட்டனர்.

படை வீரர்களின் மனநிலையை நன்கு புரிந்திருந்தான் தளபதி.

படையை நடத்திச் செல்லும்போது நாட்டின் எல்லையில் இருக்கும் படைவீரர்கள் மிகுந்த நம்பிக்கைகொண்ட காளிக் கோயிலில் படையோடு தானும் நின்றான்.

தன் படை வீரர்களைப் பார்த்துச் சொன்னான்.

"நம் அனைவரின் வெற்றிக்காக காளியை வணங்கி, காளியின் உத்தரவை வாங்கி வருகிறேன்." என்று கூறி கோயிலுக்குள் சென்றான்.

கோயிலில் இருந்து வெளியே வந்த தளபதி "நான் நாணயம் ஒன்றைச் சுண்டிப் போடுவேன். தலை விழுந்தால், நாம் வெற்றி பெறுவது உறுதி. அது காளியின் ஆணை." என்று வீர வசனம் உரைத்தான்.









அப்படியே ஒரு நாணயத்தை எடுத்து சுண்டி விட்டான், தலை விழுந்தது. அவனின் படை வீரர்கள் மிகுந்த உற்சாகமடைந்தனர்.

வீரர்கள் மிகவும் நம்பிக்கையுடனும், ஆலவலுடனும் போரிடப் புறப்பட்டனர்.

சிறப்பாக போரிட்டு வெற்றியும் கண்டனர்.



"யாருமே காளியின் உத்தரவை மாற்றிவிட முடியாது.'' என்றான் அவனுக்குக் கீழிருக்கும் துணை தளபதி.

"ஆமாம் மாற்றத்தான் முடியாது." என்று சொல்லி விட்டு அந்த நாணயத்தின் மறுபக்கத்தையும் பார்த்து புன்முறுவலோடு தன் அகத்தே வைத்துக் கொண்டான் தளபதி. அதன் இரண்டு பக்கங்களிலும் தலைதான் இருந்தது.

இக்கதை மூலம் நாம் பெறும் பாடம்:

**"நாம் எடுக்கும் உறுதியான முடிவே நமது செயலை நிர்ணயக்கிறது."**


Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555